கடவுள்துணை

தனவயிசிய குலத்திலகராகிய

# பட்டினத்துசுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு.

இஃது

சிந்தாதிரிப்பேட்டை

**வீராசாமிநாயுடு அவர்களால்**

பார்வையிடப்பட்டு.



திருசிரபுரம்.

புஸ்தகஷாப்பு

**தி. சபாபதிபிள்ளை,**

அவர்களது

மட்டுவார் குழலம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

௲௮௱௮௰-௫



உ

கணபதி துணை.

# பட்டினத்துப் பிள்ளையார்

அருளிச்செய்த.

## முதலாவது கோயிற்றிருவகவல்,

திருச்சிற்றம்பலம்.

* நினைமின்மனனே நினைமின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
அலகைத்தேரி னலமருகாலின்
உலகப்பொய்வாழ்க்கையை யுடலையோம்பற்க
பிறந்தனவிறக்கு மிறந்தனபிறக்கும்
தோன்றினமறையு மறைந்தனதோன்றும்
பெருத்தனசிறுக்குஞ் சிறுத்தனபெருக்கும்
உணர்ந்தனமறக்கு மறந்தனவுணரும்
புணர்ந்தனபிரியும் பிரிந்தனபுணரும்
அருந்தினமலமாம்புனைந்தனவழுக்காம்
உவப்பனவெறுப்பாம் வெறுப்பனவுவப்பாம்
என்றிவையனைத்து முணர்ந்தனையன்றியும்
பிறந்தனபிறந்தனபிறவிகடோறும்
கொன்றனையனைத்து மனைத்துநினைக்கொன்றன

* நினைமின்மனனே, என்பது இழிவிற் சிறப்பாகவந்த ஒருமையிற் பன்மை-மயக்கம்.

## முதலாவது-கோயிற்றிருவகவல்:

நின்றனையனைத்து மனைத்துநினைத்நின்றன
பெற்றனையனைத்து மனைத்துநினைப்பெற்றன
ஓம்பினையனைத்து மனைத்து நினையோம்பின
செல்வத்துக்களித்தனை தரித்திரத்தழுங்கினை
சுவர்க்கத்திருந்தனை நரகிற்கிடந்தனை
இன்பமுந்துன்பமு மிருநிலத்தருந்தினை
ஒன்றொன்றொழியா துற்றனையன்றியும்
புற்புதக்குரம்பைத் துச்சிலொதுக்கிடம்
என்னநின்றியங்கு மிருவினைக்கூட்டைக்
கல்லினும்வலிதாக் கருதினையிதனுள்
பீளையுஞ்சீழும் புறப்படுமொருபொறி
மீளுங்குறும்பி வெளிப்படுமொருபொறி
சளியுநீருந்தவழு மொருபொறி
உமிழ்நீர்கோழை யொழுகுமொருபொறி
வளியுமலமும்வழங்கு மொருவழி
சலமுஞ்சீயுஞ் சரியுமொருவழி
உள்ளுறத்தொடங்கி வெளிப்படநாறும்
சட்டகமுடிவிற் சுட்டெலும்பாகும்
உடலுறுவாழ்க்கையை யுள்ளுறத்தேர்ந்து
கடிமலர்க்கொன்றைச் சடைமுடிக்கடவுளை
ஒழிவருஞ்சிவபெரும் போகவின்பத்தை
நிழலெனக்கடவா நீர்மையொடுபொருந்தி
ஏணதறவினைவற விருவினைமலமற
வரவொடுசெலவற மருளறவிருளற
இரவொடுபகலற விகபரமறவொரு

முதல்வனைத்தில்லையுண் முளைத்தெழுஞ்சோதியை
அம்பலத்தரசனை யானந்தக்கூத்தனை
நெருப்பினிலறக்கென னெக்குநெக்குருகித்
திருச்சிற்றம்பலத் தொளிருஞ்சிவனை
நினைமின்மனனே நினைமின்மனனே
சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின்மனனே நினைமின்மனனே

---

இரண்டாவதுகோயிற்றிருவகவல்.

காதளவோடியகலகப்பாதகக்
கண்ணியாமருங்கிற்புண்ணுடனடுங்
காதலுக்கருத்துமல்லாணின்னிருதாட்
கங்கையஞ்சூட்டப்பாக்கியஞ்செய்யாச்
சங்கடங்கூர்ந்ததமியேன்பாங்கிருந்
கோடிக்கோடலமருங்கள்வர்
அவர்கலகமிட்டலைக்குங்கானகம்
வெமலப்பேழை யிருவினைப்பெட்டகம்
காதபித்தங்கொழைகுடிபுகுஞ்சீறூர்
மாத்தைப்புன்றோ லுதிரக்கட்டளை
நாற்றப்பாண்டநான்முழத்தொன்பது
பற்றற்றுண்டம்பேச்சுணாத்தோட்டம்
அடலைப்பெரியசுடலைத்திடருள்
பூசைக்கபிற்றி லாடும்பம்பரம
யாநோய்க்கிடமோடுமரக்கலம்



மாயாவிகார மரணப்பஞ்சரம்
சோற்றுத்துருத்திதூற்றும் *பத்தம்
தாற்றிற்பறக்குங் கானப்பட்டம்
விதிவழித்தருமன் வெட்டுங்கட்டை
சதுர்முகப்பாணன்றைக்குஞ்சட்டை
ஈமக்கனலிலிடுசிலவிருந்து
காமக்கனலிற்கருகுஞ்சருகு
கிருமிகிண்டுங்கிழங்குஞ்சருபி
பவக்கொழுந்தேறுங்கவைக்கொழுகொம்பு
மணமாய்நடக்கும்வடிவின்முடிவிற்
பிணமாய்க்கிடக்கும்பிண்டமபிணமேல்
ஊரிற்கிடக்கவொட்டாவுபாதி
காலெதிர்குவித்தபூளைகாலைக்
கதிரெதிர்ப்பட்டகடும்பனிக்கூட்டம்
அந்தரத்தியங்குமிந்திரசாபம்
அதிருமேகத்துருவினுருநிழல்
நீரிற்குமிழிநீர்மேலெழுத்து
கண்டுயில்கனவிற்கண்டகாட்சி
அதனினும்பொல்லாமாயக்களங்கம்
அமையுமமையும்பிராணனமையும்
இமையவல்லிவாழிஎன்றேத்த
ஆனந்தத்தாண்டவங்காட்டி
ஆண்டுகொண்டருள்கைநின்னருளினுக்கழகே

---

* பத்தம-கட்டு.

## மூன்றாவது-கோயிற்றிருவகவல்

பாற்கடல்கடையப்படுங்கடுவெண்ணெயைத்
திருமிடற்றடக்கியசிவனையடைக்கலம்
அடங்கலுமடங்கிடுங் கடுங்கொலைக்காலனைக்
காலெடுத்தடக்கியகடவுணின்னடைக்கலம்
உலகடங்கலும்படைத்துடையவன்றலைபறித்
திடக்கையிலடக்கியவிறைவநின்னடைக்கலம்
செய்யபொன்னம்பலச்செல்வநின்னடைக்கலம்
ஐயநின்னடைக்கலமடியநின்னடைக்கலம
மனைவழியலைந்திடுங்கனவெனும்வாழ்க்கையும்
விழுப்பொருளறியாவழுக்குறுமனனும்
அணைமலத்துதித்தலைந்தலைந்திடு
நினைவைப்புழுவென நெளித்திடுசிந்தையும்
படிறும்பாவமும்பழிப்புறுநினைப்பும்
தவறுமழுக்காறுமிவறுபொச்சாப்பும்
கவடும்பொய்யுஞ்சுவடுமவெருஞ்சின
விகலுங்கொலையுமிழிப்புறுபுன்மையும்
பகையுமச்சமுந்துணிவும்பனிப்பும்
மூக்குணமடைமையுமைப்பொறிமுயக்கமும்
இடும்பையும்பிணியுமிடக்கியவாக்கையை
உயிரெனுங்குருகுவிட்டோடுங்குரம்பையை
எலும்பொடுநரம்புகொண்டிடையிற்பிணித்துக்
கொழுந்தசைமேய்ந்து மொழுக்குவிழுங்குடிலைச்
செழும்பெழுவுதிரச்சிறுபுழுக்குரம்பையை
மலவுடற்குடத்தைப்புலவுடற்புட்டிலைத்
தொலைவிலாச்சோற்றுத்துன்பக்குழியைக்

கொலைபடைக்கலம்பலகிடக்குங்கூட்டைச்
சலிப்புறுவினைப்பலசரக்குக்குப்பையைக்
கோட்சரக்கொழுகும்பீறற்கோணியைக்
கோபத்தீமூட்டுங்கொல்லன்றுருத்தியை
ஐம்புலப்பறவையடையும்பஞ்சரத்தைப்
புலராக்கவலைவிளைமரப்பொதும்பை
ஆசைக்கயிற்றிலாடும்பம்பரத்தைக்
காசிற்பணத்திற்சுழலுங்காற்றாடியை
மக்கள்வினையின்மயங்குந்திகிரியைக்
கடுவெளியுருட்டியசகடக்காலைப்
பாவச்சரக்கொடுபவக்கடல்புக்குக்
காமக்காற்றெறிந்தலைப்பக்
கெடுவழிக்கரைசேர்கொடுமரக்கலத்தை
இருவினைவிலங்கொடியங்குபுற்கலனை
நடுவன்வந்தழைத்திடநடுங்கிடுமியாக்கையைப்
பிணமெனப்படுத்தியான்புறப்படும்பொழுதுநின்
னடிமலர்க்கமலத்துக்கபயநின்னடைக்கலம்
வெளியிடையுருமிடியிடித்தெனவெறித்தெழுங்
கடுநடைவெள்விடைக்கடவுணின்னடைக்கலம்
இமையாநாட்டத்திறையேயடைக்கலம்
அடியார்க்கெளியாயடைக்கலமடைக்கலம்
மறையவர்தில்லைமன்றுணின்றாடிக்
கருணைமொண்டலையெறிகடலேயடைக்கலம்
தேவருமுனிவருஞ்சென்றுநின்றேத்தப்
பாசிழைக்கொடியொடுபரிந்தருள்புரியும்

எம்பெருமானின்னிணையடிக்கபயம்
அம்பலத்தரசேவடைக்கலமுனக்கே

## நான்காவதுகச்சித்திருவகவல்

திருமால்பயந்த திசைமுகனமைத்து
வருமேழ்பிறவியு மானுடத்துதித்து
மலைமகள்கோமான்மலரடியிறைஞ்சிக்
குலவியசிவபதங் குறுகாதவமே
மாதனாமகிழ்ந்துகாதல்கொண்டாடும்
மானிடர்க்கெல்லாம் யானெடுத்துரைப்பேன்
விளிவெளிமாககவொளியுறக்கேண்மின்
முள்ளுங்கல்லுமுயன்றுநடக்கும்
உள்ளங்காலைப்பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும்பாலே மேவியகணைக்காற்
றுள்ளும்வராலெனச்சொல்லித்துதித்தும்
தசையுமெலும்புந்தக்கபுன்குறங்கை
இசையுங்கதலித்தண்டெனவியப்பியும்
நெடும்புடைறுங்கிக்கின்றிடுமிடையைத்
துடிபிடியென்றுசொல்லித்துதித்தும்
மலமுஞ்சலமும்வழும்புந்திரையும்
அலையும்வயிற்றையாலிலையென்றும்
சிலந்திபோலக்கிளைத்துமுன்னெழுந்து
திரண்டுவிம்மிச்சீப்பாய்ந்தேறி
உகிராற்கிறவுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய்நான்றுவற்றும்
முலையைப்பார்த்துமுளரிமொட்டென்றும்

குலையுங்காமக்குருடர்க்குரைப்பேன்
நீட்டவுமுடக்கவுநெடும்பொருள்வாங்கவும்
ஊட்டவும்பிசையவுமுதவியிங்கியற்று
ஆக்கையைப்பார்த்துக்காந்தளென்றுரைத்தும்
வேர்வையுமழுக்குமேவியகழுத்தை
பாரினினியகமுகெனப்பகர்ந்தும்
வெப்புமூத்தையுமேவியவாயைத்
துப்புமுருக்கின்றூய்மலரென்றும்
அன்னமுங்கறியுமசைவிட்டிறக்கும்
முன்னியபல்லைமுத்தெனமொழிந்தும்
நீருஞ்சளியுநின்றுநின்றொழுகும
கூரியமூக்கைக்குமிழெனக்கூறியும்
தண்ணீர்பீளைதவிராதொழுகும
கண்ணைப்பார்த்துக்கழுநீரென்றும்
உள்ளுங்குறும்பியொழுகுங்காதை
வள்ளைத்தண்டின்வளமெனவாழ்த்தியும்
கையுமெண்ணெயுங்கலவாதொழியில்
வெய்யவதரும்பேனும்விளையத்
தக்கதலையோட்டின்முளைத்தெழுந்த
சிக்கின்மயிரைத்திரண்முகிலென்றும்
சொற்பலபேசித்துதித்துநீங்கள்
நச்சிச்செல்லுநரகவாயில்
தோலுமிறைச்சியுந்துதைந்துசீப்பாயும்
காயப்பாழிக்கருவிளைகழனி
தூமைக்கூடவழிதொலைபெறுவாயில்

எண்சாணுடம்புமிழியும்பெருவழி
பண்பாற்காமங்கழிக்குமறைவிடம்
நச்சிக்காமுகனாயகாயென்றும்
இச்சித்திருக்குமிடைகழிவாயில்
திங்கட் சடையோன்றிருவருளில்லார்
தங்கித்திரியுஞ்சவலைப்பெருவழி
புண்ணிதுவென்றுபுடை வையைமூடி
உண்ணீர்பாயுமோசைச்செழும்புண்
மால்கொண்டறியாமாந்தர்புகுவழி
நோய்கொண்டொழியாநுண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர்சாரும்படுகுழி
செருக்கியகாமுகர் சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும்பிறக்கும்பெருவழி
மலஞ்சொரிந்திழியும்வாயிற்கருகே
சலஞ்சொரிந்திழியும் தண்ணீர்வாயில்
இத்தைநீங்களினிதெனவேண்டா
பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி
மெச்சிச்சிவபத வீடருள்பவனை
முத்திநாதனைமூவாமுதல்வனை
அண்டரண்டமு மனைத்துளபுவனமுங்
கண்டவண்ணலைக் கச்சியிற்கடவுளை
ஏகநாதனையிணையடி யிறைஞ்சுமின்
போகமாதரைப் போற்றுதலொழிந்தே

திருச்சிற்றம்பலம்.

## கட்டளைக்கலித்துறை.

அறந்தானியற்று மவனிலுங்கோடியதிகமில்லந், துற ந்தானவனிற்சதகோடியுள்ளத் துறவுடையோன், மறந் தானறக்கற்றறிவோடிருந்திருவாதனையற், றிறந்தான்பெ ருமையையென்சொல்லுவேன் கச்சியேகம்பனே. (க)

கட்டிஉணைத்திடும்பெண்டீ நமக்கருங் காலத்தச்சன், வெட்டிமுறிக்குமரம்போற சரீரத்தைவீழத்திவிட்டார். கொட்டிமுழுகவியழுவார்மயானக்குறுகியப்பா வெட்டி யடிவைப்பரேவிறைவாகச்சியேகம்பனே. (உ)

கைப்பிடிநாயகன் றூங்கையிலே யவன்கையையெடு த், தப்புறந்தன்னிலசையாமன் முன்வைத்தபல்வளமி, லொப்புடன்சென்றுதூயினித்துயின்வந்துறங்குவளையெ ப்படிநானம்புவேனிறைவா கச்சியேகம்பனே. (௩)

நன்றறிற்பூட்டியசூத்திரப் பாவைநன்றாற் தப்பிறற் றன்றாலுமாடிச்சுலித்திடுமோ வந்தத்தன்மையைப்போ ல், உன்றனியானுந்திரிவதல்லான் மற்றுனைப்பிரிந்தால் என்றனிலாவதுண்டோ விறைவாகச்சியேகம்பனே.

நல்லாரிணக்கமுநின் பூசைநேசமுஞானமுமே, யல் லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளும், இல்லாளு ஞ்சுற்றமுமைந்தரும் வாழ்வுமெழிலுடம்பும், எல்லாம் வெளிமயககேயிறைவா கசசியேகம்பனே. (௫)

பொல்லாதவனெறிநில்லாதவனைம்புலன்கடமை, வெ ல்லாதவன்கல்விகல்லாதவன் மெய்யடியவர்பாற், செல்

லாதவனுண்மை சொல்லாதவனின் றிருவடிக்கண், பில்லாதவன் மண்ணிலேன் பிறந்தேன் கச்சியேகம்பனே. ()

பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைப்பிறந்துமண்மே லிறக்கும்பொழுதுகொடு போவதில்லையிடைநடுவிற், கு றிக்குமிச்செல்வஞ் சிவன்றந்ததென்றுகொடுக்கறியா, தி றக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே

அன்னவிசாரமதுவே விசார மதுவொழிந்தாற், சொ ன்னவிசாரந்தொலையாவிசார நற்றோகையரைப், பன்ன விசாரம்பலகால்விசார மிப்பாவிநெஞ்சுக், கென்னவிசா ரம்வைத்தாயிறைவா கச்சியேகம்பனே. (அ)

கல்லாப்பிழையுங் கருதாப்பிழையுங் கசிந்துருகி, நில் லாப்பிழையு நினையாப்பிழையு நின்னஞ்செழுத்தைச், சொல்லாப்பிழையுந் துதியாப்பிழையுந் தொழாப்பிழை யு, மெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்ப னே. (௯)

மாயநட் போரையுமாயாமலமெனுமாதரையும், வீயவி ட்டோட்டி வெளியே புறப்பட்டுமெய்யருளாந், தாயுட ன்சென்றுபின்றாதையைக் கூடிப்பின்றாயைமறந், தேயு மதேநிட்டையென்றானெழிற் கச்சியேகம்பனே. (௰)

வரிக்கோலவேல்விழியார நுராகமயக்கிற்சென்று, ச ரிக்கோதுவேனெழுத்தஞ் சுஞ்சொலேன்றமியேனுடல், நரிக்கோகழுகுபருந்தினுக்கோ வெய்யநாய்தனக்கோ, வெ ரிக்கோவிரையெதுக்கோ விறைவா கச்சியேகம்பனே. ()

காதென்றுமூக்கென்றுகண்ணென்று காட்டியென்க
ண்ணெதிரே,மாதென்றுசொல்லிவரு மாயைதன்னைமற
விட்ட, தூதென்றெண்ணாமல்சுகமென்றுநாடித்துற
புக்கிலை, யேதென்றெடுத்துரைப்பேனிறைவாகச்சியே
கம்பனே. (கஉ)

ஊருஞ்சதமல்ல வுற்றார்சதமல்ல வுற்றுப்பெற்ற, பே
ருஞ்சதமல்ல பெண்டீர்சதமல்லபிள்ளைகளுஞ், சீருஞ்ச
தமல்லசெல்வஞ்சதமல்ல தேசத்திலே, யாருஞ்சதமல்ல
நின்றாள்சதங் கச்சியேகம்பனே. (கங)

சிறுமியினையதுபெண்ணுருவாகித்திரண்டுருண்டு,கூ
றுமுலையுமிறைச்சியுமாகிக் கொடுமையினாற், பீறுமலமு
முதிரமுஞ்சாயும் பெருங்குழிவிட், டேறுங்கரைகண்டி
லேனிறைவா கச்சியேகம்பனே. (க௪)

பொருளுடையோரைச்செயலிலும்வீரரைப்போர்க்க
ளத்தும், தெருளுடையோரைமுகத்திலுந்தேர்ந்துதெளி
வதுபோ. லருளுடையோரைத்தவத்திற்குணத்திலருளி
லன்பி லிருளறுசொல்லிலுங்காணத் தகுங்கச்சியேகம்ப
னே. (கரு)

பருத்திப்பொதியினைப்போலேவயிறுபருக்கத்தங்கடு
ருத்திக்கறுசுவைபோடுகின்றார் துறந்தோர்தமக்கு, வருத்
தியமுதிடமாட்டாரவரையிம்மானிலத்தி,லிருத்திக்கொ
ண்டே யிருந்தாயிறைவாகச்சியேகம்பனே. (௰௬)

பொல்லாவிருளகற்றுங்கதிர்கூகை யெண்புட்கண்ணி

னுக்,கல்லாயிருந்திடுமாறெற்குமேயறிவோருளத்தில்,வ ல்லா ரறியவா ரறியாததமக்குமயக்கங்கண்டா, யெல்லாம் விழிமயக்கேயினிறவாகச்சியேகம்பனே. (௰௭)

வாதுக்குச்சண்டைக்கு போவார்வருவார்வழக்குரைப் பார், தீதுக்குதவியுஞ்செய்திடுவார் தினந்தேடியொன்று மாதுக்களித்துமயங்கிடுவார்விதியார்படைப்பு,மேதுக்கிவர் பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே. (௰௮)

ஓயாமற்பொய்சொல்வார்நல்லோரை நிந்திப்பருற்றுப் பெற்ற, தாயாரைவைவார்சதியாயிரஞ்செய்வார்சாஸ்த்திர ங்க, ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார் தமையண்டினர்க் கொன், றீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேக ம்பனே. (௰௯)

அப்பென்றும்வெண்மையதாயினுமாங்கந்நிலத்தியல் பாயத்,தப்பின்றியே குணம்வேற்றுமைதான்பலசாதியுற் ற, செப்பிற்பகுத்துவம்பகுவாயுள்ளசீவனிலு, மிப்படி யேநிற்குமொங்கைபிரான்கச்சியேகம்பனே. (௨௰)

நாயாய்ப்பிறந்திடினல்வேட்டையாடி நயம்புரியுந், தா யாரவயிற்றினராய்ப்பிறந்துபின்சம்பன்னராயக், காயா மரமுமவறளாங்குளமுங்கல்லாவுமென்ன, வீயாமனித ரையேன்படைத்தாய்கச்சியேகம்பனே. (௨௧)

ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாம லென்னன்பையெல் லாம்,போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்து க, கூற்றைப்பணிகொளுந்தா ளுடையாய்குன்றவில்லு-

சொல்லால்வருங்குற்றஞ் சிந்தனையால்வருந்தோடஞ்
செய்த, பொல்லாததீவினைபார்வையிற் பாவங்கள்புண்
ணியநூ லல்லாதகேள்வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவு
மற், றெல்லாப்பிழையும்பொறுத்தருள்வாய்கச்சியேகம்
பனே. (௨௮)

முட்டற்றமஞ்சளையெண்ணெயிற் கூட்டிமுகமினுக்கி,
மெட்டிட்டுப்பொட்டிட்டுப்பித்தளை யோலைவிளக்கியிட்
டே, பட்டப்பகலில்வெளிமயக்கே செயும்பாவையர்மே
லிச்சைதனைத்தவிர்ப்பாயிறைவா கச்சியேகம்பனே. ( )

பிறந்துமண்மீதிற்பிணியே குடிகொண்டுபேரின்பத்
தை, மறந்துசிற்றின்பத்தின்மேன்மயலாகிப் புன்மாதரு
க்குட், பறந்துழன்றேதடுமாறிப் பொன்றேடியப்பாவை
யாக்கே, இறந்திடவோபணித்தாயிறைவா கச்சியேகம்ப
னே. (௰௫)

பூதங்களற்றுப்பொறியற்று சாரம்புலன்களற்றுப்,
பேதங்குணமற்றுப்பேராசைதானற்றுப்பின்முனற்றுக்
காதங்கரணங்களுமற்றுவானந்தக்காட்சியிலே, பேதங்க
லந்திருப்பேனிறைவா கச்சியேகம்பனே. (௫௧)

நல்லாயெனக்குமனுவொன்றுந்தந்தருண் ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும் பொழுதியல்பூசை
செயுஞ், சொல்லார்நற்கோயினியம்பலவகைத்தோத்தி
ரமு, மெல்லாமுடிந்தபின்கொல்லுகண்டாய்கச்சியேக
ம்பனே. (௫௨)

கடுஞ்சொல்லின்வம்பரை யீனரைக்குண்டரைக்காமுக
ரைக், கொடும்பவமேசெயுநிர்மூடர்தம்மைக்குவலயத்து
னெடும்பனைபோலவளர்ந்துநல்லோர்தநெறியறியா, இ
டும்பரையேன்வகுத்தாயிறைவாகச்சியேகம்பனே (௩௧)

கொன்றேனனேகமுயிரை யெல்லாம்பின்புகொன்று
கொன்று, தின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனது தீதெ
ன்றே, நின்றேனின்சந்நிதிக்கேயதனாற்குற்றநீபொறு
ப்பாய், என்றேயுனைநம்பினேனிறைவாகச்சியேகம்பனே

வாரிருந்தென்னநல்லோரிருந்தென் னூடகாரமுள்ள,
போரிருந்தென் பெறுதாயிருந்தென் மடப்பெண்கொடி
யாள், சீரிருந்தென்ன சிறப்பிருந்தென்னவிக்கியதந்
தை, பேரிருந்தென்னவல்லவாயிறைவாகச்சியேகம்பனே

வில்லாலடிக்கச்செருப்பாலுதைக்க வெகுண்டொருவ
ன், கல்லாலெறியப்பிரம்பாலடிக்கக்களிவண்டுகூட, அ
ல்லார்பொழிற்றில்லை யம்பலவாணர்க்கோரன்னைபிதா,
இல்லாததாலல்லவோவிறைவாகச்சியேகம்பனே (௩௪)

திருவேகம்பவிருத்தம்

அன்னையெத்தனை யெத்தனையன்னையோ
அப்பனெத்தனை யெத்தனையப்பனோ
பின்னையெத்தனை யெத்தனைபெண்டிரோ
பிள்ளையெத்தனையெத்தனைபிள்ளையோ
முன்னையெத்தனையெத்தனைசென்மமோ
மூடனாயடியேனுமறிந்திலே

னின்னமெத்தனை யெத்தனை சென்மமோ
தென்செயவென்கச்சியேகம்பநாதனே (௯)

---

சுவாமிபெயர் - ஏகாம்பரேசர் - தேவியார்
காமாட்சியம்மை-திருச்சிற்றம்பலம்
திருத்தில்லை.

காம்பினங்குயபனைத்தீதானாகரும் பொன்னுக்கு காசினிக்கு, தாயமினங்குபல்வாசையும் விட்டுத்தனி த்துச்செத்துப், போய்ப்பினை தன்னைத்திரளாகக்கூடிப் புரண்டினிமேற், சாயமினங்கத்துதையோ வென்றோ வென்றில்லைச்சங்கரனே. (௧)

சோறிகிராடு துணிதருமசுப்பைதொண்டன் பறைகள், டேறிடுங்கைகளிறங்கிச்சதிவினைபெப்பொழுது, நீறிடும்மேனியாசிறம்பலவா நீ நத்தகண்டா, ஓடுங்கண்கருநிதிநெஞ்சமெண்ணுள்ளமுமே, (௨)

அழலுக்குள் வெண்ணெயெனவே யுருகிப்பொன்னம் பலத்தார், கிழவுக்குமனின்றுதவமுதைற்றுமனிட்டேரியன ணர். குழலுக்கிசைந்தவனையாலைக் கொண்டுகுறமேறலும் செய்து, விழலுக்குமுதத்துலையிட்டிறைத்தேனெனவிதிவசமே. (௩)

ஓடாமற்பாழுக்குழையாமலோர் முறைப்படுவர்பால், கூடாமனல்லவர்கூட்டம்விடாமல் வெங்கோபநெஞ்சு,

ஞ்டோமனஞ் சைவப்பூவாமலின்றைக்கு நாளைக்கென்று, தே
ரமறச்செல்வந்தருவாய் சிதம்பரதேசிகனே. (௪)

பாராமலேற்பவர்க்கில்லை யென்னுமற்பமுந்து சொல்லி,
வாராமற்பாவங்கள் வந்தணுகாமன் மனமயர்ந்து, பேராம
ரிசைகெட்டிரியாமலன்பு பெற்றதவனரச, சேராமற்செல்வ
ந்தருவாய் சிதம்பரதேசிகனே. (௫)

கொல்லாமற்கொன்றதைத் தின்னாமற்குத்தச் சிரங்கோளா
களவு, கல்லாமற்கைதவரோடிணங்காமற்கனாவிலும் பொ
ய், சொல்லாமற்சொற்களைக் கேளாமற்றோகையர்மாயை
யிலே, செல்லாமற்செல்வந்தருவாய் சிதம்பரதேசிகனே.

முடிசார்ந்தமன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு,
பிடிசாம்பலாய்வெந்து மண்ணாவதுங்கண்டு பின்னுமிந்த
ப், படிசார்ந்தவாழ்வை நினைப்பதல்லாற்பொன்னினம்ப
லவ, ரடிசார்ந்து நாமுய்யவேண்டுமென்றே யறிவாரில்லை
யே, (௭)

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக் கட்டுச்சிபிற். சால்வு
பாதிபசிதாகமாகுமுறசஞ்சிதமா, மாலையுபாதிதுயில்கா
மாமிவைமாற்றியிட்டே, யாலமுகந்தருளம்பலவாவெ
னையாண்டருளே. (௮)

ஆரும்புகத்தில்லையம்பலவாணரருகிற்சென்றால், பா
ம்பிடை பங்கதிக்குமரவப்பினை பற்றிச்சென்றால், பேய்புகுக
ணைமூர்ப்பெருந்தலைப் பூதமும்பின்றொடரும், போயென்
செய்வாய்மனமே பிணக்காடவர்போமிடமே (௯)





ஓடுமெடுத்தனாடையுஞ் சுற்றியுலாவிபெள்ள, வீடுக
டோறும்பலிவாங்கியேபவி தீயற்றவாபோலாடுமேநட்கொ
ண்டிங்கட்பலத்தேதிற்குமாண்டிதன்னைத், தேடுமகணைக
கென்னகாண் சிவகாமசவுந்தரியே. (௰)

ஊட்டுவிப்பானுமுறக்குவிப்பானுமிங்கொன்றொடொ
ன்றை, மூட்டிவிப்பானுமுயக்குவிப்பானு முயன்றவி
னை, காட்டுவிப்பானுமிருவினைப் பாசக்கயிற்றின்வழி,
பாட்டுவிப்பானுமொருவனுண்டே தில்லையம்பலத்தே ()

அடியார்க்கெளியவரம் பலவாணரடிபணிந்தால், ம
டியாமற்செல்வவரம் பெறலாம்வையமேழளந்த, நெடி
யோனும்வேதனுங்காணாத நித்தநடனருட், குடிகாணு
நாங்களவர்க்காளாகுமெங்கள்குலதெய்வமே. (௧௨)

தெய்வச்சிதம்பரதேவாயுன் சித்தந்திரும்பிவிட்டால்,
பொய்வைத்தசொப்பனமோ மன்னர்வாழ்வும்புவியுமெங்
கே, மெய்வைத்தசெல்வமெங்கே மண்மேல்தாமேனை
யெங்கே, கைவைத்தநாடகசாலை யெங்கேயிதுகண்டயக்
கே. (௧௩)

உடுப்பானும்பாலன்னமுண்பானு முய்வித்தொருவர்
தம்மைக், கெடுப்பானுமேதென்று கேள்விசெய்வானும்
கெதியடைக்க, கொடுப்பானுந்தேகியென்றேற்பானுமே
ற்ககொடாமன்று, தடுப்பானுநீயல்லவோ தில்லையா
னந்ததாண்டவனே. (௧௪)

வித்தாரம்பேசினுஞ்சோங் கேறினுங்கம்பமீதிருந்து: தத்தாவென்றோதிப்பவுரி கொண்டாடினுந்தம்முன்றம்பி, யொத்தாசைபேசினுமாவ துண்டோதில்லையுண்ணி றைந்த, கத்தாவின்சொற்படியல்லாது வேறில்லைகண்மங் களே (கரு)

பிறவாதிருக்கவரம்பெறல்வேண்டும் பிறந்துவிட்டா, லிறவாதிருக்கமருந்துண்டு காணிதுவெப்படியோ, வற மார்புகழ்த்தில்லை யம்பலவாணரடிக்கமல. மறவாதிரும னமேயது காணன்மருந்துனக்கே. (கசு)

தவியாதிருநெஞ்சமே தில்லைமேவியசங்கரனைப், புவி யார்ந்திருக்கின்ற ஞானாகரனைப்புராந்தகனை, யவியாவி ளக்கையென் னம்பலத்தாடியை யையர்தெழுத்தாற், செவி யாமற்செபித்தாற்பிறவாமுத்திசித்திக்குமே. (கஎ)

நாவின்மறைப்பொருளம்பலவாணரைநம்பியவர். பா விலொருதரஞ்சேவிக்கொணாதிருப்பார்க்கருங்கல், மேனி லெடுத்தவர்கைவிலங்கைத்தைப்பர்மீண்டுமொரு, காவி னிறுத்துவர்கிட்டியுந்தாம் வந்துகட்டுவரோ- (கஅ)

ஆற்றோடுதும்பையணிந் தாடும்பலவாணர்தமைப், போற்றாதவர்க்கடையாள முண்டேயிந்தப் பூதலத்திற், சோற்றாவியற்றுச்சுகமறுச் சுற்றத்துணியுமற்றே, யேற் றாலும்பிச்சைகிடையாமலேக்கற்றிருப்பர்களே (ககூ)

அத்தனைமுப்பத்துமுக்கோடி தேவர்க்கதிபதியை, சி த்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெங், கத்தனைப்பொ

திருச்செங்காடு

நெருப்பானமேனியர் செங்காட்டுடையார்த்திருநிழலருகே (க்
கிருப்பாரிருவுளமெப்படியோ யானின்னமென்னையன்னை
கருப்பாசயக்குழிக்கே தள்ளுமோ விப்போ கண்ணன்காணரிய
திருப்பாதமேதருமோ தெரியாது சிவஞ்செயலே. (க)

திருவொற்றியூர்

ஐயுந்தொடர்ந்து விழியுஞ்செருகி யறிவழிந்து, மெய்யு
ம்பொய்யாகி விடுகின்றபோதொன்று வேண்டுவல்யான்
செய்யுந்திருவொற்றியூருடையீர் திருநீறுமிட்டுக், கையு
ந்தொழப்பண்ணி யைந்தெழுத்தோதவுங் கற்பியுமே. (க)

கா[illegible]வாதபேசி[illegible]மூன்றையுங்கட்டபிரானை, தி
ட்டபதமோக[illegible]நெஞ்சமாரி யூரனொருபடியி, ன
ட்பவர்பொருப்பத்தகத்தேறு பாதையுண்டு, இடப்
பதுகாண்மனமே விதியேட்டைக்கிழிப்பதுவே (உ)

திருவிடைமருதூர்.

காடேதிரிந்தென்ன காற்றேபுசித்தென்ன கந்தைசுற்றி
யோடேயெடுத்தென்ன வுள்ளன்பிலாதவர் மோங்குவிண்
ணோர், நாடேயிடைமருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடேயிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்பமேவுவரே ()

தாயும்பகைகொண்ட பெண்டீர் பெரும்பகை தன்னு
டைய சேயும்பகையுறவோரும் பகையிச்செகமும்பகை
யாயும்பொழுதிலருஞ்செல்வ நீங்கிவிடிங்காதல்லுறும், நே
யமொருஞ்சேமருதீசர் பொற்பாதஞ்சத்தியமே, (உ)

திரைக்கேயிரவும்பகலுந்திரிந்திங்கினைந்துநின்று, ந
ரைக்கேயவலக்குழியாநகேயசுப்பாந்தொழுகும், புரைக்
கேபுழுவுந்தரியேனையாண்டருள்பொன்முகலிக், கரைக்
கேகல்லாலநிழற்கிழமர்ந்தருள்காளத்தியே (௬)

நாறுங்குறுஞ்சசெந்தானை தோறடுநைநாபொடாழுஞ்சி, யூ
றுமலைக்குழிநாமத்துவார மொளிதகிடுபுன், பேறுந்த
சைப்பிளப்பங் தரநகத்துட்சிறந்தின்பமயில், பேருப்ப
நந்தருவாய்திருக்காளத்தியீசுரனே (௭)

கைலாயம்.

காஞ்சாயுவெள்ளியமலைகரசே கின்கழனம்பினே, ஞா
ஞ்சாயுஞ்செஞ்மமொழிக்கிவாயகரவுரனுககாய, மாஞ்
சாயச்செங்கைமழுவலஞ் சாயவனைந்தகொன்றைத, தே
ஞ்சாயகல்வதிருமேனிசாடத்தசிவகொழுந்தே (௧)

இல்லந்துறந்துபசிவந்தபோதங்கிரந்துநின்று, பல்லுங்
கறையறுவெளவாயமா யொன்றிற்பற்றுயின்றிச, செல்
லும்பொருளுநிழந்துககாணந்தருதக்ககதிலே, யல்லும்
பகலுமிருப்பதென்றோ கயிலாயத்தனே. (௨)

சினந்தனையற்றுபிரியமுந் தானற்றுசெய்கையற்று, நி
னைந்ததுமற்றுநினையாமையுமற்று நிச்சித்தனுய்த், தனை
ந்தனியேயிருந்தானந்தங் த்திரைதங்குகின்ற, வனந்தமி
லென்றிருப்பேனத்தனே கயிலாயத்தனே. (௩)

கையாரவேற்றுநின் றங்ஙனங்கின்று கரித்துணியை,
தையாதுடுத்துநின் சந்திக்கேவந்துசந்ததமே, மெய்யா
ரந்தபணிசெய்வனோ புரோமமயிர்சிலிர்ப்ப,வையாவெ
ன்றேவெட்டிநிவத்தென்றேகயிலாயத்தனே. (௪)

நீறார்ந்தமேனியு ரோமஞ்சிலிர்த்துள நெக்குநெக்குருச
சேறுபகைக்கந்துக்கிங்கே யருங்கின்சீரடிக்கே, மாறாத்தி
யானமுற்றானந்த மேற்கொள்வபார்பிறகண்ணி, ஈரா
ய்ப்பொருக்கிடப்ப தென்றோகயிலாயத்தனே. (௫)

செல்வரைப்பின்சென்று சகசமப்பேசிக் கினைக்கின
றுமேபல்லினைக்காட்டிப்பரிதவியாமறையானந்தத்தி,னெ
ல்லையிறபுக்கிடமே காந்தயாமியனைக்காட்ட தத்தே, யல்லல்
றவென்றிருப்போனாத்தனேகைலாயத்தனே (௬)

மந்திரநானென்பாதமே தனில்லெகாமேயன்வழுக்கறிந்தந்
சிந்திக்குந்தன்கைதையாயானெனன்செயமேவலெனவினைத்தகற
றி. புத்திப்பரிவிற்கருணையை யேந்திபூசையைப்போ,
லெனத்தகக்குறியவன்கா னைத்தனேகைலாயத்தனே (௭)

வருந்தேன்பிறந்துமிறந்துமயக்குப்புலன்வழிபோயப்,
பொருந்தேனாகிற்புகுதுகின்றிலேன் புகழ்வாரிடத்தில், விந
ந்தேனினியவர்கூட்டம்விடேனியலஞ்செழுத்தாமருந்தே
னருந்துவனின்னருளாற் கைலாயத்தனே (௮)

கண்ணுண்டுகாணக் கருத்துண்டுநோக்கக்கசிந்துருகி
ப், பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்பச்சிலை
யா, லெண்ணுண்டுசாத்தவெதிர்நிற்க வீசனிருக்கையி
லே, மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானிடமே

சொல்லிலுஞ்சொல்லின்முடிவிலும்வேதச்சுருதியிலு
மல்லிலுமாசற்றவாகாயந் தன்னிலுமாய்ந்துவிட்டோ ரி
ல்லிலுமன்பரிடத்திலுமீசனிருக்குமிடம், கல்லிலுஞ்செ
பிலுமோவிருப்பா னெங்கள்கண்ணுதலே [௫௭]

வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொ
ழிந்தால், தினைப்போதளவுநில்லாது கண்டாய்சிவன்பா
தந்நினை, நினைப்போரைமேவுநினையாரைநீங்கிநெறியினி
ன்று னுனைப்போலொருவனுண்டோ மனமேயெனக்கு
றுவரே (௭)

பட்டைக்கிழித்துப்பருவூசி தன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கையின்முன்கொ
டுத்துக், கட்டியிருந்தகனமாயக்காரிதன் காமமெல்லா ம்,
விட்டுப்பிரியவென்றோ விங்ஙனேசிவன்மீண்டதுவே ()

சூதுற்றகொங்கையுமானார்கலவியுஞ்சூழ்பொருளும்
போதுற்றபூசலுக்கென் செயலாஞ்செயதபுண்ணியத்தா
ல். தீதற்றமன்னவன்சிந்தையினின்று தெளிவதற்கோ, கா
தற்றவூசியைத்தந்துவிட்டா னென்றன்கைதனிலே (௬௦)

வாதுற்றதிண்புய ரண்ணாமலையா மலர்ப்பதத்தைப்,
போதுறறெப்போதும்புகலு நெஞ்சேயிந்தப்பூதலத்திற

ளாட்டமென்றேயிரு சற்குருபாதத்தை நம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்-கூ
ட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ-ரோ
ட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே (௨௧)

என்செயலாவதியாதொன்றுமில்லை யினித்தெய்வமே
யுன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த-பி
ன்செய்ததீவினையாதொன்றுமில்லைபிறப்பதற்கு - முன்
செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே (௨௨)

திருவேடமாகித் தெருவிற்பயின்றெனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைப்கருமென்றனைப்பதம்பணிந்தேன்-
ருவாகுமேதக்கடற்கரைமேவக்கருதுமென்னை!- யுருவாக்
கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே (௨௩)

விட்டேனுலகம்விரும்பேனிருவினைவீணருடன் -கிட்
டேனவருரைகேட்டிடேன்மெய்கெடாதநிலை - தொட்
டேன் சுகதுக்கமற்றுவிட்டேன் தொல்லைநான்மறைக்கு
மெட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்திய[illegible]

அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தையைந்தும்-வி
ட்டேறிப்போன வெளிதனிலேவியப்பொன்றுகண்டே

ன்-வட்டாகிச்சம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க-வெ
ட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே (உ௫)

எரியெனக்கென்னும் புழுவோவெனக்கென்னுமிந்தம
ண்ணுஞ்-சரியெனக்கென்னும் பருந்தோவெனக்கெனுந்
தான்புசிக்க-நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னு
மிந்நாறுடலைப் - பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்ன
பேறெனக்கே (உ௬)

அண்ணரன்வீதியரசிருப்பாகுமணிபடையோர் - ந
ண்ணொருநாலொன்பதாமவரோவலுநண்ணுமிவ்வூர் - து
ண்ணெனப்பசிக்குமடைப்பள்ளியானசுகமுமெல்லா-மெ
ண்ணிவிகாலமவமேவிடுத்தனமெண்ணரிதே (உ௭)

என்பெற்றதாயருமென்னைப்பிணமென்றிகழ்ந்துவிட்
டார்-பொன்பெற்றமாதரும் போவென்றுசொல்லிப்புல
ம்பிவிட்டார்-கொண்பெற்றமைந்தரும் பின்வலம்வந்துகு
டமுடைத்தா-ருன்பறவொருபற்றுமில்லையுடை
யவனே (உ௮)

கறையற்றபல்லுங்கரித்துணியாடையுங்கள்ளமின்றிப்
பொறையுற்றநெஞ்சமும் பொல்லாதவூணுமப் புறந்தின்
னையுந்-தறையிற்கிடப்புமிரந் துண்ணுமோடுஞ்சகமறிய
க்-குறைவுற்றசெல்வமென்றேகோலமாமறைகூட்டிடுமே

எட்டுத்திசையும்பதினாறுகோணமு மெங்குமொன்றா
ய்-முட்டித்ததும்பிமுளைத்தோங்குசோதியை மூடமெல்
லாம் - கட்டிச்சுருட்டித்தங்கக் கத்தில்வைப்பர்கருத்தில்
லையார்-பட்டப்பகலையிரவென்றுகூறிடும்பாதகரே ()

வாய்நாறுமூழன் மயிர்ச்சிக்குநாறிடுமையிடுங்கண்-பீ
நாறுமங்கம்பிணவெடிநாறும்பெருங்குழிவாய்ச் . சிநாறு
யோனியழுநாறுமிந்திரியச்சேருசிந்திப்-பாய்நாறுமங்கைய
ர்க்கோவிங்ஙனேமணம்பற்றியதே (௩௧)

உரைக்கைக்குநல்லதிரு வெழுத்தைந்துண்டொப்படி
யே-செருக்கித்தரிக்கத்திருநீறுமுண்டு தெருக்குப்பையி
ற்-றரிக்கக்கரித்துணியாடையுமுண்டெந்தச்சாதியிலு-மி
ரக்கத்துணிந்துகொண்டேன் குறைவேதுமெனக்கில்லை
யே. (௩௨)

ஏதப்பட்டாயினிமேற் படும்பாட்டையிதென்றறிந்து
போதப்பட்டாயில்லைநல்லோரிடஞ்சென்றுபுல்லறிவால்
வாதைப்பட்டாய்மடமாதர் கலவிமயக்கத்திலே-பேதை
ப்பட்டாய்நெஞ்சமேயுனைப்போலில்லைபித்தருமே(௩௩)

சுரப்பற்றுவல்வினைசுற்றமுமற்றுத் தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர்கையிணக்கற்றுக்கவலையற்று - வரப்
பற்றுநாதனைவாயாரவாழ்த்திமனமடங்கப் - பரப்பற்றிரு
ப்பதன்றோபரமாபரமானந்தமே (௩௪

பேய்போற்றிரிந்துபிணம்போற்கிடந்திட்டபிச்சையெ
ல்லா-நாய்போலருந்திநரிபோலுழன்றுநன்மங்கையரைத்
தாயைப்போற்கருதித்தமர்போ லனைவர்க்குந்தாழ்மைசொல்
லி-சேயைப்போலிருப்பர் கண்டீருண்மைஞானந்தெளிந்தவ
ரே (௩௫)

விடக்கேபருக்கின்விருந்தேகமண்டலவீணைவிட்ட-மு
டக்கேபுழுவந்துழைபிடமேநலமுற்றிலாச் - சடக்கேக
ருவிதளர்ந்துவிட்டாற்பெற்றதாயுந்தொடாத - தொடக்
கேயுனைச்சுமந்தேனின்னமேதுசுகமெனக்கே (௩௬)

அழுதாற்பயனென்ன நொந்தாற்பயனென்னவாவதி
ல்லை தொழுதாற்பயனென்ன நின்னையொருவர்சுடவுரை
த்த - பழுதாற்பயனென்ன நன்மையுந்தீமையும்பங்கயத்
தோ - னெழுதாப்படிவருமோசலியாதிரென்னெஞ்ச
மே. (௩௭)

செல்வரைப்பின்சென் றுபசாரம்பேசித்தினந்தினமு
ம் - பல்வினைக்காடிப்பரிதவியாமற்பரானந்தத்தி-னெல்
லையிற்புக்கொருவேகாந்தமாயெனக்காமிடத்தே-யல்லலற்
றென்றிருப்பேனாலநீழலரும்பொருளே (௩௮)

ஊரீருமக்கோருபதேசங்கேளுமுடம்படக்-போரீர்
சமணைக்கழுவேற்றுநீற்றைப்புறங்கண்டவனைச்-சாரீரணைந்
தலைச்சுற்றத்தைநீங்கிச்சகத்தைக்க-வேரீருமக்கவர்தாமே
தருவரிணையடியே (௩௯)

நீற்றைப்புனைந்தென்னநீராடப்போயென்னநீமனமே
மாற்றிப்பிறக்கவகையறிந்தாயில்லைமாமறைநூ—லேற்றிக்
கிடக்குமெழுகோடிமந்திரமென்னகண்டா—யாற்றிற்கிட
ந்துந்துறையறியாமலலைகின்றையே (௪௰)

ஓங்காரமாய்நின்றவத்துவிலே யொருவித்துவந்து-பா
ங்காய்முளைத்தபயனறிந்தாற்பதினாலுலகு-நீங்காமனீங்கி
நிறையா நிறைந்துநிறையுருவா-யாங்காரமானவறகெட்டா
ககனிவந்தமர்ந்திடுமே (௪௧)

விதியார்படைப்புமரியா ரளிப்பும்வியன்கயிலைப்-பதி
யார்தொடைப்பு நம்பாலணுகாதுபரானந்தமே-கதியாக
க்கொண்டுமற்றெல்லாந்துயிலிறகனவெனநீ- மதியாதிரு
மனமேவிதுகாணன்மருந்துனக்கே (௪௨)

நாய்க்குண்டுதெண்டுநமக்குண்டுபிச்சைநமனைவெல்ல
வாய்க்குண்டுமந்திரபஞ் சாட்சரமதியாமல்வரும்-பேய்க்
குண்டுநீறுதிகைப்புண்டுநின்றபிறவிப்பிணி - நோய்க்கு
ண்டுதேசிகன்றன்னருணோக்கங்கணோக்குதற்கே (௪௩)

நேமங்கணிட்டைகள் வேதங்களாகமநீதிநெறி-யோம
ங்கடர்ப்பணஞ்சந்திசெபமந்த்ரயோககலை- நாமங்கள்சந்
தனம்வெண்ணீறுபூசிநலமுடனே - சாமங்கடோறுமிவர்
செய்யும் பூசைகள்சற்பனையே * (௪௪)

இனைத்தனைபுத்திசொன்னாலுங் கேட்டிலைநன்னெஞ்
சமே - யேனிப்படிகெட்டுழலுகின்றாயினியேதுமிலா
வானத்தின்மீனுக்குவன்றூண்டி லிட்டவகையதுபோற்
போனத்தைமீளநினைக்கின்றனையென்னபுத்தியிதே ()

அஞ்சக்கரமெனுங்கோடாலிகொண்டிந்தவைம்புலனு
ம்-வஞ்சப்புலக்கட்டைவேரற வெட்டிவளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச்சதாசிவமென்கின்றவித்தையிட்டுப்--பு
ஞ்சக்களைபறித்தேன்வளர்த்தேன் சிவயோகத்தையே ( )

தாயாருஞ்சுற்றமுமபெண்டிருங்கைவிட்டுத்தாழ்ந்திடு
நா-ணீயாருநானுமெனப்பகர்வாரந்தநேரத்திலே-நோயா
ரும்வந்துகுடிகொள்வரோகொண்டநோயுமொரு-பாயாரு
நீயுமல்லாபின்னையேது நட்பாமுடலே (௬௭)

ஆயும்பொழுதுமயிரக்கால் கடோறுமருங்கிருமி-தோ
யுமலக்குட்டையாகிய காயத்தைச்சுட்டுவிட்டாற்-பேயுந
டனமிடுங்கடமாமென்றுபேசுவதை - நீயுமறிந்திலையோ
பொருடேட நினைந்தனையே (௬௮)

பூணும்படிக்கல்லபொன்னுக்குத்தானல்லபூரித்தனைக்-கா
ணும்படிக்கல்லபங் கையறகல்லநற்காட்சிக்கல்ல சேணு
நகடந்தசிவனடிக்கல்லவென் சிந்தைகெட்டுச்-சாணும்வ
ளர்க்கவடியேன் படுந்துயாசற்றல்லவே (௬௯)

வெட்டாதசக்கரம்பேசாத மந்திரம்வேறொருவர்க்-கெ
ட்டாதபுட்பநிறையாத தீர்த்தமினிமுடிந்து-கட்டாதலிங்
கங்கருதாதநெஞ்சங்கருத்திலுள்ளே-முட்டாதபூசையன்
றோகுருநாதன் மொழிந்ததுவே (௭௰)

எருமுட்டைபிட்கிலுந்திராங்கிடுஞ்செல்லுக்கெவரழுவா
ர்-கருமுட்டைபுக்குக்கழலகன்றுய கனதுக்கமதாய்-பெ
ருமுட்டுப் பட்டவர்போலழும் பேதையீர்பேத்துகிறீ
ரொருமுட்டும்வீட்டுமரணமென்றைக்குமோதுமினே

மையாடுகண்ணியுமைந்தரும்வாழ்வுமனையுஞ்செந்தீ-யை
யானின்மாயை யுருவெளித்தோற்றமகிலத்துள்ளே-மெய்
யாயிருந்தது நாட்செலநாட்செலவெட்டவெறும் பொய
யாய்ப்பழங்கதையாய்க் கனவாய்மெல்லப்போனதுவே

ஆயாய்பலகலையாய்ந்திடுந்தூயவருந்தவர்பாற்-போயா
இஃதுண்மையைத்தெரிந்தாயில்லைபூதலத்தில்-வேயார்ந்
ததோளியாகாமவிகாரத்தில்வீழ்ந்தழுந்திப்-பேயாய்விழி
க்கின்றனைமனமேயென்னபித்துனக்கே (௫௩)

அடியாருறவுமரன்பூசைநேசமுமன்புமன்றிப் - படிமீ
தில்வேறுபயனுளதோபங்கயன்வகுத்த- குடியானசுற்ற
முந்தாரமும்வாழ்வுங்குயக்கலங்கள் - தடியாலடியுண்ட
வாபோருக்குமென்றினஞ்சார்ந்திலோ (௫௪)

ஆங்காரபபொக்கசங்கோபங்களஞ்சியமாணவந்தா-னீ
ங்காவரண்மனைபொயவைத்தகூடம்விண்ணீடிவளா-தே
ங்காபெருமதிற்காமவிலாசமித்தேகங்கந்தல் - பாங்காயு
னைப்பணிந்தெப்படிஞானம்பலிப்பதுவே (௫௫)

ஒழியாப்பிறவியெடுத்தேங்கியேங்கியுழன்றநெஞ்சே,
யழியப்பதவிகளவுடனுங்கேட்டியறிதியனை - ம்மூயான்க
ரத்தனைமால்விடையானைமனத்திலுன்னி- விழியாற்புன
லசிந்திவிம்மியழுநன்மைவேண்டுமென்றே (௫௬)

நாய்க்கொருசூலுமதற்கோர்மருத்துவநாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம் பிடிபடுமோபெருங் காஞ்சிரங்கா
யாக்குவராரகருந்துவராரதுபோலுடம்பு- தீக்கிரையாவ
தல்லாலேதுக்காமிதைச்செட்புமினே (௫௭)

கசசிற்கிடக்குங் கனதனத்திற்கடைக்கண்கள்பட்டே
யிச்சித்திருக்கின்றவேழைநெஞ்சேயிமவானபயந்த- பச்
சைப்பசுங்கொடியுண்ணாமுலைபங்கர்பாதத்திலே-தைச்சு
க்கிடமனமேயொருகாலுந்தவறில்லையே (௫அ)

மாணார்விழியைக்கடந்தேறிவந்தனன்வாழ்குருவுங்-கோ
ணாகியென்னைக் குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனாலும்பேறிருந்தாலுநற்பேறிதுபொய்யன்றுகா-ணா
னாலுமிந்தவுடம்போடிருப்பதருவருப்பே. (௫௯)

சற்றாகிலுந்தன்னைத்தாணறியாய்தனையாய்ந்தவரை. யு
ற்றாகிலுமுனைக்கப்பொருந்தாயுனக்கானநிலை-பற்றாய்கு
ருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றென் - பெற்
றாய்மடநெஞ்சமேயுனைப்போலில்லைபித்தனுமே (௬௰)

உளியிட்ட கல்லையுமொப்பிட்டசாந்தையுமுத்தையறப்
புளியிட்டசெம்பையும்போற்றுகிலேனுயர் பொன்னெ
னவே - யொளியிட்டதாளிரண்டுள்ளேயிருத்துவதுண்
மையென்று-வெளியிட்டடைத்துவைத்தேனினிமேலொ
ன்றும்வேண்டிலனே. (௬௧)

திருச்சிற்றம்பலம்.

---

## தாயாருக்குத் தகனகிரியை

செய்கையிற் பாடிய

வெண்பா.

ஐயிரண்டுதிங்களாவங்கமெலாநொந்துபெற்றுப்
பையலென்றபோதேபரிந்தெடுத்துச்-செய்யவிரு

கைப்புறத்திலேந்திக்கனகமுலைதந்தாளை
யெப்பிறப்பிற்காண்பேனினி. (௧)
முந்தித்தவங்கிடந்துமுந்நூறுநாட்சுமந்தே
யந்திபகலாச்சிவனையாதரித்துத்-தொந்தி
சரியச்சுமந்துபெற்ற தாயார்தமக்கோ
வெரியத்தழன்மூட்டுவேன் (௨)
வட்டிலிலுந்தொட்டிலிலுமார்மேலுந்தோண்மேலும்
கட்டிலிலும்வைத்தென்னைக்காதலித்து-முட்டச்
சிறகிலிட்டுக்காப்பாற்றிச் சீராட்டுந்தாய்க்கோ
விறகிலிட்டுத்தீமூட்டுவேன் (௩)
நொந்துசுமந்துபெற்றுநோவாமலேந்திமுலை
தந்துவளர்த்தெடுத்துத் தாழாமே-யந்திபகல்
கையிலேகொண்டென்னைக்காப்பாற்றுந்தாய்தனக்கோ
மெய்யிலேதீமூட்டுவேன் (௪)
அரிசியோநானிடுவேனாத்தாடனக்கு
வரிசையிட்டுப்பார்த்துமகிழாம-லுருசியுள்ள
தேனேயமிர்தமே செல்வத்திரவியப்பு
மானேயெனவழைத்தவாய்க்கு (௫)
அள்ளியிடுவதரிசியோதாய்தலைமேற்
கொள்ளிதனைவைப்பேனோ கூசாமன்-மெள்ள
முகமேன்முகம்வைத்து முத்தாடியென்றன
மகனேயெனவழைத்தவாய்க்கு (௬)

விருத்தம்.

முன்னையிட்டதீமுப்புரத்திலே
பின்னையிட்டதீதென்னிலங்கையில்

அன்னையிட்டதீயடிவயிற்றிலே
யானுமிட்டதீமூள்கமூள்கவே (எ)

வெண்பா

வேகுதேதீயதனில்வெந்துபொடிசாம்ப
லாகுதேபாவியேனையகோ - மாகக்
குருவிபறவாமற் கோதாட்டியென்னைக்
கருதிவளர்த்தெடுத்தகை (அ)
வெந்தாளோசோணகிரிவித்தகாநின்பதத்தில்
வந்தாளோவென்னைமறந்தாளோ-சந்ததமு
முன்னையேநோக்கியுகந்துவரங்கிடந்தென்
றன்னையேயீன்றெடுத்ததாய் (௯)
வீற்றிருந்தாளன்னைவீதிதனிலிருந்தாள்
நேற்றிருந்தாளின்றுவெந்துநீறானாள்-பாற்றெளிக்க
வெல்லீரும்வாருங்களேதென்றிரங்காமல்
பெல்லாஞ்சிவமயமேயாம (௰)

இடைமருது.

மென்றுவிழுங்கிவிடாய்கழிக்கத்தேட
லென்றுவிடியுமெனக்கெங்கோவே நன்றி
கருதாப்புரமூன்றுங் கட்டழலாற்செற்ற
மருதாவுன்சன்னிதிக்கேவந்து (க)

ஒற்றி.

கண்டங்கரியதாங் கண்மூன்றுடையதா
மண்டத்தைப்போல வழகியதாங்-தொண்ட
ருடலுருகத்தித்திக்கு மோங்குபுகழொற்றிக்
கடலருகேநிற்குங்கரும்பு (உ)

ஓடுவிழுந் துசீப்பாயு மொண்டதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந் தைப்பா ணறிந்து கொண்டேன் - கடுவருந்துந்
தேவாதி தேவன் றிருவொற்றி யூர்த் தெருவிற்
போவா ரடியிற் பொடி (௩)
வாவியெல்லாந் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு
காவணங்க ளெல்லாங் கணநாதர் - பூவுலகில்
ஈது சிவலோகமென் றென்றே மெய்த்தவத்தோ
ரோதுந் திருவொற்றி யூர் (௪)

திருவாரூர்.

ஆரூரரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றூரூர்க டோறு முழலுவீர் - நேரே
யுளக்குறிப்பை நாடாத வூமர்காணீவி
ர்விளக்கிருக்கத் தீத்தேடுவீர் (௫)
எருவாய்க் கிருவிரன்மே லேறுபுழுக் கூட்டைக்
கருவாய்க் கேசண் கலக்கப்பட்டோய - திருவாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடந்தாமே
நீறேறு முந்தானாக்கைக்கே (௬)

திருக்காஞ்சி.

எத்தனை யூரெத்தனை வீடெத்தனைதாய் பெற்றவர்க
ளெத்தனைபே ரிட்டழைக்க வென்றேனோ நித்த
மெனக்குக் களையாற்றே யேகம்பா கம்பா
வுனக்குத் திருவிளையாட் டோ (௭)

கச்சிக்காரோணம்.

அத்திமுதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந் தளிக்குந் தேசிகா - மெத்தப்

பசிக்குந்தயாபாவியேன்பாழ்வயிற்றைப்பற்றி
யிசிக்குதையாகாரோணரே

திருக்காளத்தி

பொய்யையொழியாய் புலாலையொழியாய்காளத்தி
யையனேயென்று யறஞ்செய்யாய்-வெய்ய
சினமேயொழியாய் திருவெழுத்தைந்தோதாய்
மனமேயுனக்கென்னமாண்பு (௯)

திருவிருப்பையூர்

மாதாவுடல்சலித்தாள் வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே-நாதா
விருப்பையூர்வாழ்சிவனே யின்னமோரன்னை
கருப்பையூர்வாராமற்கார் (௰)

திருவையாறு.

மண்ணுக்குணலாறவாணும்புகையாற
வெண்ணரியதாயுமினைப்பாறப்-பண்ணுமயன்
கையாறவுமடியேன்காலாறவுங்கண்பா
ரையா திருவையாறா (௰௧)

குற்றாலம்.

காலன்வருமுன்னேகண்பஞ்சடைமுன்னே
பாலுண்கடைவாய்படுமுன்னே-மேல்விழுந்தே
யுற்றாரழுமுன்னே யூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையேகூறு (௰௨)

பொது.

சித்தம்பலமுஞ் சிவனுமருகிருக்க
வெற்றம்பலந்தேடி விட்டோமே-சித்தம்

வித்தாரமுங்கடம்பும் வேண்டாமடநெஞ்சே
செத்தாரைப்போலேதிரி (எ)
வெட்டவெளியான வெளிக்குந்தெரியாது
கட்டளையுங்கைப்பணமுங் காணாதே இட்டமுடன்
பற்றென்றுபற்றாது பாவியேநெஞ்சிலவன்
இற்றெனவேவைத்தநினைப்பு. (அ)

## பின்முடுகு வெண்பா.

இப்பிறப்பைநம்பி யிருப்பாரோநெஞ்சகமே
வைப்பிருக்கவாயின்மனையிருக்க-சொப்பனம்போல்
விக்கிப்பறந்திட்டுக் கண்ணையத்தப்பஞ்சிட்டுப்பைக்
கக்கிச்செத்துக் கொட்டக்கண்டு (௯)
சோறுநிருக்கவிருப்பினையேவெள்விளை யோனை
சிலமுகிக்கலையேசிந்தையே-கால்கைக்கக் [டவு
கொட்டையிட்டுப்பெத்தையிட்டுக்கத்தியொத்தப்பட
கட்டையிட்டுச்சுட்டுவிடக் கண்டு (௰)
ஒன்பதுவாயத்தோற்பைக் கொருநாளைப்போலவே
யன்புவைத்துநெஞ்சேயலைந்தாயே-வன்கழுக
டத்தித்தத்திச்சட்டைத் தட்டிக்கட்டிப்பிட்டுக
கத்திக்குத்தித்தின்னக்கண்டு (௰௧)
இன்னம்பிறக்கவிசைவையோநெஞ்சமே
மன்னரிவரென்றிருந்துவாழ்ந்தவரை-முன்னை
மெரிந்தகட்டைமீதிலிணக்கோவணத்தை
யுரிந்துருட்டிப்போட்டதுகண்டு (௰௨)
முத்தாரங்கபூட்டு மொய்குழலார்தம்மை
நச்சசங்கநல்விலங்குபூட்டு-கடைச்சங்க

ஊர்போதனைதூது பம்பட்டோ-வீர்பட்டோ
நாம்பூரிவாழ்ந்தநலம் (௰௩)
எத்தனைநாள்கூடி யெடுத்தசரீரமிவை
யத்தனையுமண்டின்பதல்லவோ-வித்தகனார்
காலைப்பிடித்துமெள்ளக்கருல்பகலறிடத்தே
மேலைக்குடியிருப்போமே (௰௪)
எச்சிலென்றுசொல்லி யிதமகிதம்பேசாதே
யெச்சிலிருக்குமிடமறியீ-ரெச்சிறனை
யுயத்திருந்துபார்த்தா லொருமையவெளிப்படும்பின்
சித்தசிருமயமயமே (௰௫)
எத்தனைபேர்நட்ட குழி யெத்தனைபேர்தொட்ட முலை
யெத்தனைபோபறரியிழுத்தவிதழ்-நித்தநித்தம
பொய்யடா பேசும் புவியின்மடமாதரைவிட்
டெப்படாவுய்வாயடாவுய (௰௬)
இருப்பதுபொய்போவதுமெய்யென்றெண்ணி நெஞ்சே
யொருத்தருக்குந்தீங்கினைநீயுன் றதே-பருத்ததொந்தி
நம்மதென்றுநாமிருப்பநாய்நரிகளபேய்கழுகு
தம்மதென்றுதாமிருக்குந்தான் (௰௭)
எத்தொழிலைச்செய்தாலு மேதவத்தைப்பட்டாலு
முத்தர்மனமிருக்குமோனத்தே-வித்தகமாய்
காதிவிளையாடியிரு கைவீசிவந்தாலும
தாதிமனநீர்க்குடத்தேதான் [௰௮]
மாலைப்பொழுதின்று மஞ்சளரைத்தேகுளித்து
வேலைமினுக்கிட்டுவிழித்திருந்து-சூலாகிய

